# தமிழ் அமுது

## இரண்டாம் வகுப்பு

தமிழ்நாடு அரசு
இலவசப் பாடநூல் வழங்கும்
திட்டத்தின்கீழ் வெளியிடப்பட்டது.
(விற்பனைக்கு அன்று)

தீண்டாமை ஒரு பாவச்செயல்
தீண்டாமை ஒரு பெருங்குற்றம்
தீண்டாமை மனிதத்தன்மையற்ற செயல்



தமிழ்நாட்டுப்
பாடநூல் கழகம்
கல்லூரிச் சாலை, சென்னை - 600 006

முதற் பதிப்பு - 2001
மறு பதிப்பு - 2007

## ஆசிரியர்கள்

**அ. கருப்பையா,**
ஊராட்சி ஒன்றியத் தொடக்கப் பள்ளி,
நெடுவாசல் மேற்கு,
புதுக்கோட்டை மாவட்டம்.

**பி. மரிய செபாஸ்டின்,**
அரசு தொடக்கப் பள்ளி, கடியபட்டினம்,
மணவாளக்குறிச்சி & (அ.நி)
குமரி மாவட்டம் - 629 252.

**ஜி. தனபால்,**
ஊராட்சி ஒன்றிய நடுநிலைப் பள்ளி,
அரடாப்பட்டு,
திருவண்ணாமலை 606 806.

**கே. சேஷாத்திரி,**
ஊராட்சி ஒன்றியத் தொடக்கப் பள்ளி
தாளியாம்பட்டி,
கரூர் - 639 120.

**நா. சீதாராமன்,**
ஊராட்சி ஒன்றிய நடுநிலைப் பள்ளி,
சிந்தாமணி,
விழுப்புரம் - 605 601.

**கே. சுசீலா,**
ஊராட்சி ஒன்றியத் தொடக்கப் பள்ளி,
தெற்குத்தெரு(அஞ்சல்)மேலூர் ஒன்றியம்,
மதுரை மாவட்டம்.

**க.நா. கருணாநிதி,**
ஊராட்சி ஒன்றியத் தொடக்கப் பள்ளி,
கெச்சாணிப்பட்டி புதூர்,
தெப்பக் குளத்துப்பட்டி - 624 709.
திண்டுக்கல் மாவட்டம்.

**வி. குப்பம்மாள்,**
ஊராட்சி ஒன்றியத் தொடக்கப் பள்ளி,
வலையப்பட்டி, மோகனூர் ஒன்றியம்,
நாமக்கல் மாவட்டம் - 637 020.

**டி. இராணி சிவகாமி,**
ஊராட்சி ஒன்றியத் தொடக்கப் பள்ளி,
ஹெல்த் கேம்ப், கூடலூர் - 643 211.
நீலகிரி மாவட்டம்.

**ஓவியர்கள்**
சாவித்திரி ரவி
காலேப் கண்ணன்

## மாநில வளக்குழு உறுப்பினர்கள்

**த. தனுஷ்கோடி,**
முதுநிலை விரிவுரையாளர்,
மாவட்டக் கல்வி பயிற்சி நிறுவனம்,
காளையார் கோயில் - 630 551.
சிவகங்கை மாவட்டம்.

**அ. திருநாவுக்கரசு,**
விரிவுரையாளர்,
மாவட்டக் கல்வி பயிற்சி நிறுவனம்,
சென்னை - 600 005.

**சி. வீ. சேஷாத்ரி,**
ஆலோசகர்,
மாவட்டத் தொடக்கக் கல்வித் திட்டம்,
சென்னை.

**கோ. பழனிவேல் முருகன்,**
முதுநிலை விரிவுரையாளர்,
மாவட்டக் கல்வி பயிற்சி நிறுவனம்,
மஞ்சூர், இராமநாதபுரம் மாவட்டம்.

**வீ. விஜயகாந்தி,**
இளநிலை விரிவுரையாளர்,
ஹோபார்ட் ஆசிரியப் பயிற்சி நிறுவனம்,
சென்னை.

**பா. சரஸ்வதி,**
க்ரை,
சென்னை.

பாடங்கள் தயாரிப்பு: **தமிழ்நாடு அரசுக்காக**
**மாவட்டத் தொடக்கக் கல்வித் திட்டம் (தமிழ்நாடு)**

**இந்நூல் 70 ஜி.எஸ்.எம்.** தாளில் அச்சிடப்பட்டுள்ளது.

ஆப்செட் முறையில் அச்சிட்டோர்
ராயல் ஸ்டார் பேக்கேஜிங் (பி) லிட், சிவகாசி - 626 123

## தேசிய கீதம்

ஜன கண மன அதிநாயக ஜய ஹே
பாரத பாக்ய விதாதா
பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
திராவிட உத்கல பங்கா
விந்திய ஹிமாசல யமுனா கங்கா
உச்சல ஜலதி தரங்கா
தவ சுப நாமே ஜாகே
தவ சுப ஆசிஸ மாகே
காஹே தவ ஜய காதா
ஜன கண மங்கள தாயக ஜய ஹே
பாரத பாக்ய விதாதா
ஜய ஹே ஜய ஹே ஜய ஹே
ஜய ஜய ஜய ஜய ஹே!

- மகாகவி இரவீந்திரநாத தாகூர்

## நாட்டுப் பண் - பொருள்

இந்தியத் தாயே! மக்களின் இன்ப துன்பங்களைக் கணிக்கின்ற நீயே எல்லாருடைய மனத்திலும் ஆட்சி செய்கிறாய்.

நின் திருப்பெயர் பஞ்சாபையும், சிந்துவையும், கூர்ச்சரத்தையும், மராட்டியத்தையும், திராவிடத்தையும், ஒரிசாவையும், வங்காளத்தையும் உள்ளக் கிளர்ச்சி அடையச் செய்கிறது.

நின் திருப்பெயர் விந்திய, இமய மலைத் தொடர்களில் எதிரொலிக்கிறது; யமுனை, கங்கை ஆறுகளின் இன்னொலியில் ஒன்றுகிறது; இந்தியக் கடலலைகளால் வணங்கப்படுகிறது.

அவை நின்னருளை வேண்டுகின்றன; நின் புகழைப் பரவுகின்றன.

இந்தியாவின் இன்ப துன்பங்களைக் கணிக்கின்ற தாயே! உனக்கு

வெற்றி! வெற்றி! வெற்றி!

## தேசியப்பாடல்

வந்தே மாதரம்!
ஸுஜலாம், ஸுபலாம் மலயஜ ஶீதலாம்
ஸஸ்ய ஸ்யாமலாம் மாதரம்

ஸுப்ர ஜ்யோத்ஸ்நா புலகித யாமிநீம்
புல்ல குஸுமித த்ரும தள ஸோபிநீம்

ஸுஹாஸிநீம், ஸு மதுர பாஷிநீம்
ஸுகதாம், வரதாம், மாதரம்!
வந்தே மாதரம்!
வந்தே மாதரம்!

- பங்கிம் சந்திர சாட்டர்ஜி

## உறுதிமொழி

'இந்தியா எனது நாடு. இந்தியர் அனைவரும் எனது உடன் பிறப்புகள்.

என் நாட்டை நான் பெரிதும் நேசிக்கிறேன். இந்நாட்டின் பழம்பெருமைக்காகவும் பன்முக மரபுச் சிறப்பிற்காகவும் நான் பெருமிதம் அடைகிறேன். இந்நாட்டின் பெருமைக்குத் தகுந்து விளங்கிட என்றும் பாடுபடுவேன்.

என்னுடைய பெற்றோர், ஆசிரியர்கள், எனக்கு வயதில் மூத்தோர் அனைவரையும் மதிப்பேன். எல்லாரிடமும் அன்பும் மரியாதையும் காட்டுவேன்.

என் நாட்டிற்கும் என் மக்களுக்கும் உழைத்திட முனைந்து நிற்பேன். அவர்கள் நலமும் வளமும் பெறுவதிலே நான் என்றும் மகிழ்ச்சி காண்பேன்'.

## தேசிய ஒருமைப்பாட்டு உறுதிமொழி

'நாட்டின் உரிமை வாழ்வையும் ஒருமைப்பாட்டையும் பேணிக்காத்து வலுப்படுத்தச் செயற்படுவேன்' என்று உளமார நான் உறுதி கூறுகின்றேன்.

'ஒருபோதும் வன்முறையை நாடேன் என்றும் சமயம், மொழி, வட்டாரம் முதலியவை காரணமாக எழும் வேறுபாடுகளுக்கும் பூசல்களுக்கும் ஏனைய அரசியல் பொருளாதாரக் குறைபாடுகளுக்கும் அமைதி நெறியிலும் அரசியல் அமைப்பின் வழியிலும் நின்று தீர்வு காண்பேன்' என்றும் நான் மேலும் உறுதியளிக்கிறேன்.

## தமிழ்த்தாய் வாழ்த்து

நீராரும் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்
சீராரும் வதனமெனத் திகழ்பரதக் கண்டமிதில்
தெக்கணமும் அதிற்சிறந்த திராவிடநல் திருநாடும்
தக்கசிறு பிறைநுதலும் தரித்தநறுந் திலகமுமே
அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெருந் தமிழணங்கே!
தமிழணங்கே!

உன் சீரிளமைத் திறம் வியந்து
செயல் மறந்து வாழ்த்துதுமே!
வாழ்த்துதுமே!
வாழ்த்துதுமே!

- 'மனோன்மணீயம்' பெ. சுந்தரம்பிள்ளை

## பாரத மாதாவின் முன் மாணவனாகிய/மாணவியாகிய நான் மேற்கொள்ளும் சபதம்

பெயர் :
வகுப்பு : பள்ளி :

நான் ஒரு இந்தியன். சாதி, மத வேறுபாடுகளைக் களைந்து பள்ளிக் கல்வி மூலமாக நான் பெறும் நன்மைகளைத் தாய்த்திருநாட்டின் உயர்வுக்காகப் பயன்படுத்துவேன்.

வந்தே மாதரம்!

கையொப்பம்

# உங்களால்தான் முடியும்!

ஆசிரியப் பெருமக்களே!

வணக்கம். மொழியும் நாடும் நமது கண்கள். தாய்மொழியே குழந்தைகளின் ஆற்றலை, திறனை, ஆளுமையை வளர்க்கும்.

தாய்மொழியில் பெறும் திறனே பிற பாடங்களைக் கற்கப் பெரிதும் உதவும். குழந்தைகள் அனைத்துத் திறன்களையும் முழுமையாகப் பெறச் செய்ய உங்களுக்கு உதவியாய்
**இதோ 'தமிழ் அமுது.'**

இத்தமிழ் அமுது குழந்தைகளைக் கவரும் வண்ணம் முற்றிலும் புதிய முறையில் வடிவமைக்கப்பட்டுள்ளது.

இதிலுள்ள படங்களும் பாடல்களும் கதைகளும் குழந்தைகளின் கற்பனையையும் படைப்பாற்றலையும் வளர்க்கும். தானே கற்றலுக்கு வழிவகுக்கும்.

உங்களுடைய ஆற்றலால் பாடப்பொருள்களைச் செயல்களாக்கிக் கற்றலில் இனிமை சேருங்கள்.

பயிற்சிகளும் செயல்களும் மொழித் திறனை முழுமையாக வளர்க்க உங்களுக்கு வழிகாட்டும்.

கற்றலின் இனிமை உத்திகளைக் கையாண்டு சூழலில் கிடைக்கும் எளிய கற்றல் துணைக் கருவிகளைப் பயன்படுத்திக் கற்றலை மகிழ்ச்சியுடையதாக்குவது உங்கள் கையில்தான் உள்ளது.

உங்களிடம் ஒப்படைக்கப்பட்டக் குழந்தைகளைத் திறன் அடைவு பெறச் செய்வதோடு, சமுதாயத்திற்குப் பயன்படும் வகையில் உருவாக்க உங்களால்தான் முடியும்.

கற்பித்தல் பணியில் என்றென்றும் உங்களுடன்.

- ஆக்கியோர்

# உள்ளே...

பக்கம்

| | |
|---|---|
| 4. எழுதுதல் | 11. எளிய சொற்களையும் சொற்றொடர்களையும் எழுதிப் பழகுதல் (பாடம் 19). |
| | 12. எளிய, அறிந்த சொற்களைச் சொல்லக் கேட்டு எழுதுதல். (பாடம் 20). |
| | 13. ஆசிரியர் வழிகாட்டலுடன் எளிய வருணனை வாக்கியங்களை எழுதுதல் (பாடம் 21). |
| 5. கேட்டல் மற்றும் படித்தல் வாயிலாகக் கருத்துகளை விளங்கிக் கொள்ளுதல் | 14. சிறிய வாய்மொழி, எழுத்து மூலம் தரப்பட்ட தொடர் நிகழ்ச்சிக் கூறுகளைத் தொடர் மாறாது மீட்டுக் கூறல் மற்றும் படித்தல் ஆகியவற்றில் பயிற்சி அளித்தல் (பாடம் 24). |
| | 15. தகவலைக் கேட்ட பின்பு என்ன? எப்படி? வினாக்களுக்கு விடை கூற இயலுதல். (பாடம் 25). |
| 6. செய்முறை இலக்கணம் | 16. சொற்களின் பகுதி, விகுதி வேர்ச்சொல் இவற்றின் ஒத்த தன்மைகளைக் கண்டு அறியும் திறன் (பயிற்சிகளில்). |
| 7. தானே கற்றல் | 17. எளிய படப்பொருள் விளக்க அகராதியைப் பயன்படுத்தும் திறன் (பாடம் 26). |
| 8. மொழியைப் பயன் படுத்துதல் | 18. பணிவு கலந்து பேசுதல் - கருத்தார்வத்துடன் கவனித்தல் (பாடம் 23). |
| 9. சொல்லாட்சித் திறன். | 19. ஏறக்குறைய 1500 சொற்களைப் படித்து, புரிந்து பயன்படுத்தும் திறன் (செய்யுள் பகுதியும் அனைத்துப் பாடங்களும்). |

| | |
|---|---|
| 4. எழுதுதல் | 11. எளிய சொற்களையும் சொற்றொடர்களையும் எழுதிப் பழகுதல் (பாடம் 19).<br>12. எளிய, அறிந்த சொற்களைச் சொல்லக் கேட்டு எழுதுதல். (பாடம் 20).<br>13. ஆசிரியர் வழிகாட்டலுடன் எளிய வருணனை வாக்கியங்களை எழுதுதல் (பாடம் 21). |
| 5. கேட்டல் மற்றும் படித்தல் வாயிலாகக் கருத்துகளை விளங்கிக் கொள்ளுதல் | 14. சிறிய வாய்மொழி, எழுத்து மூலம் தரப்பட்ட தொடர் நிகழ்ச்சிக் கூறுகளைத் தொடர் மாறாது மீட்டுக் கூறல் மற்றும் படித்தல் ஆகியவற்றில் பயிற்சி அளித்தல் (பாடம் 24).<br>15. தகவலைக் கேட்ட பின்பு என்ன? எப்படி? வினாக்களுக்கு விடை கூற இயலுதல். (பாடம் 25). |
| 6. செய்முறை இலக்கணம் | 16. சொற்களின் பகுதி, விகுதி வேர்ச்சொல் இவற்றின் ஒத்த தன்மைகளைக் கண்டு அறியும் திறன் (பயிற்சிகளில்). |
| 7. தானே கற்றல் | 17. எளிய படப்பொருள் விளக்க அகராதியைப் பயன்படுத்தும் திறன் (பாடம் 26). |
| 8. மொழியைப் பயன் படுத்துதல் | 18. பணிவு கலந்து பேசுதல் - கருத்தார்வத்துடன் கவனித்தல் (பாடம் 23). |
| 9. சொல்லாட்சித் திறன். | 19. ஏறக்குறைய 1500 சொற்களைப் படித்து, புரிந்து பயன்படுத்தும் திறன் (செய்யுள் பகுதியும் அனைத்துப் பாடங்களும்). |

# 1 சிட்டு

சிட்டே சிட்டே பறந்து வா!
சிறகைச் சிறகை அடித்துவா!

கொட்டிக் கிடக்கும் மணிகளைக்
கொத்திக் கொத்தித் தின்னவா!

ஆற்று நீரில் குளிக்கிறாய்!
அழகாய்த் தூளி ஆடுகிறாய்!

சேற்று வயலில் அமர்கிறாய்!
திறந்த வெளியில் திரிகிறாய்!

உன்னைப் போலப் பறக்கணும்,
உயர உயரச் செல்லணும்,

என்னை அழைத்துச் சென்றிடு!
ஏற்ற இடத்தைக் காட்டிடு!

* மாணவர்களை, இது போன்ற எளிய பாடல்களைப் பாடச் செய்க.

# 2 கிணற்றில் விழுந்த நிலா!

அன்று முழு நிலவு நாள். குரங்குகள் விளையாடிக் கொண்டிருந்தன.



ஆ! அதோ பார்!... நிலா கிணற்றில் விழுந்துவிட்டது.



வாருங்கள் நிலாவைக் காப்பாற்றுவோம்

ஐயோ! நிலா
உடைந்து
விட்டதே!

வானத்தைப்
பாருங்கள். நிலா
உடையவில்லை...
அதோ! முழுநிலா!

*இது போன்ற படக் கதைகளைப் பயன்படுத்திக் கதைகளைக் கூறுக; மாணவர்களையும் கூறச் செய்க; சிறு சிறு வினாக்கள் கேட்க.

# 3 உதவி செய்வோம்










* இது போன்ற சூழல்களை உருவாக்கி மாணவர்களை உரையாடச் செய்க.

# 4 கேட்க! செய்க!



- ஒருவர்பின் ஒருவராக வட்டத்தில் ஓடுங்கள்.

'பாம்...பாம்...' ஒலியெழுப்பிப் பேருந்து ஓட்டுவதைப் போல் சுற்றி வாருங்கள். 'குப்... குப்...' ஒலியெழுப்பித் தொடர் வண்டியைப் போல் ஓடி வாருங்கள்.

- வேகமாக நடந்து வாருங்கள்!
மெதுவாக நடந்து வாருங்கள்!
பின்னோக்கி நடந்து செல்லுங்கள்!
முன்னோக்கி நடந்து வாருங்கள்!



- நின்ற இடத்தில் குதியுங்கள்!
முன்னால் குதியுங்கள்!
பின்னால் குதியுங்கள்!
ஆடாமல் அசையாமல் நில்லுங்கள்.



* இது போன்ற கட்டளைகளைக் கூறி மாணவர்களைச் செயல்படச் செய்க.

# 5 விளையாடி மகிழ்வோம்!



குழுவிற்கு இருவராகப் பிரிந்து, ஒருவர் மற்றவரிடம் வினாக்கள் கேட்க.

- எத்தனை சிறுமியர் 'பாண்டி' விளையாடுகிறார்கள்?
- எத்தனை பேர் பந்து விளையாடுகிறார்கள்?
- இப்படத்தில் உள்ள விளையாட்டுகளைக் கூறு.





**விடையளி.**

- உனக்கு விருப்பமான விளையாட்டு எது?
- நீ யார் யாருடன் விளையாடுவாய்?
- நீ விளையாடுவதற்குப் பயன்படுத்தும் பொருள்களின் பெயர்களைக் கூறு/எழுது.
- உனக்குத் தெரிந்த வேறு விளையாட்டுகள் ஏதேனும் ஐந்தைக் கூறு/எழுது.

# 6 இது என் வீடு!

மேகலை படம் வரையத் தொடங்கினாள். அப்போது 'மியாவ்! மியாவ்!'.... என்றவாறு அவளுடைய பூனை அருகில் வந்தது. "எனக்கு ஒரு படம் வரைந்து தருவாயா?" என்று கேட்டது.



மேகலை, "சரி " என்றாள். "நான் சொல்வது போல் வரை" என்றது பூனை.

"ஒரு வீடு வரை;
அதில் சன்னல்கள் வரை ;
வீட்டின் அருகில் இரண்டு
மரங்கள் வரை;
பறவைகள் பறப்பது போல வரை; வீட்டின்
முன்னால் பூச்செடிகள் வரை".

மேகலை வரைந்து முடித்தாள். பூனைக்குட்டி 'இது என் வீடு' என்று மகிழ்ச்சியால் துள்ளிக் குதித்தது.



1. மேகலை வரைந்ததுபோல நீயும் வரை; வண்ணம் தீட்டு.



2. செய்து பார்.

பழைய செய்தித்தாளைச் சிறு சிறு துண்டுகளாகக் கிழி.

கிழித்த துண்டுகளை ஒரு தாளில் உன் விருப்பம்போல் ஒட்டு.

என்ன உருவத்தைக் காண்கிறாய்? அதைச் சுற்றிக் கோடிடு.



# 7 ஓடி விளையாடு பாப்பா!



ஓடி விளையாடு பாப்பா - நீ
ஓய்ந்திருக்க லாகாது பாப்பா
கூடி விளையாடு பாப்பா - ஒரு
குழந்தையை வையாதே பாப்பா.

காலை யெழுந்தவுடன் படிப்பு - பின்பு
கனிவு கொடுக்கும் நல்லபாட்டு
மாலை முழுதும் விளையாட்டு - என்று
வழக்கப் படுத்திக்கொள்ளு பாப்பா.

உயிர்களிடத்தில் அன்பு வேணும் - தெய்வம்
உண்மையென்று தானறிதல் வேண்டும்
வயிரமுடைய நெஞ்சு வேணும் - இது
வாழும் முறைமையடி பாப்பா.



தேசியக்கவி **சி. சுப்பிரமணிய பாரதியார்**

* இது போன்ற சந்தப் பாடல்களைத் தனியாகவும் குழுவாகவும் பாடச் செய்க.

# 8 எங்கள் ஊர்ச் சந்தை



**வளவன்:** பொன்னா! நீயும் சந்தையில் தான் காய்கறிகள் வாங்குகிறாயா?

**பொன்னன்:** ஆமாம் அண்ணா! இங்குதான் புத்தம் புதிய காய்கறிகள், பழங்கள்,கீரைகள் கிடைக்கின்றன. விலையும் குறைவு; எடையும் சரியாக இருக்கிறது.

**வளவன்:** ........................................................................

........................................................................

**பொன்னன்:** ........................................................................

........................................................................

**(வளவன் - பொன்னன் இடையே நடைபெறும் உரையாடலைத் தொடர்ந்து உரையாடுக.)**

இவர்கள் என்ன
உரையாடியிருப்பார்கள்?
பங்கேற்று நடித்துக் காட்டு.







* இதுபோன்று அறிமுகமான சூழல்களை உருவாக்கி மாணவர்களைப் பங்கேற்று உரையாடச் செய்க.

# 9 ஆசை! ஆசை!



யானை மேலே ஏறிச் சென்று
நகரைச் சுற்ற ஆசை.

பூனை மேலே ஏறிச் சென்று
புலியைப் பிடிக்க ஆசை.





நீலக் கடலில் நித்தம் நித்தம்
நீந்தி மகிழ ஆசை.





வண்ண வண்ணச் சிறகடித்து
வானில் பறக்க ஆசை.



மின்னித் திரியும் மின்மினி போல்
விண்ணில் திரிய ஆசை.





வெண்ணிலாவைப் பிடித்து வந்து
வண்ணம் தீட்ட ஆசை.

1. எலியின் ஆசைகளைப் பாடத்தில் இருந்து எடுத்து எழுது.

- ____________ சுற்ற ஆசை
- ____________ மகிழ ஆசை
- ____________ பறக்க ஆசை
- ____________ பிடிக்க ஆசை



2. உனக்கு என்னென்ன செய்ய ஆசை - கூறு.

3. படத்திற்கு உரிய சொல்லை வட்டமிடு; எழுது; அதைப் பற்றி உனக்குத் தெரிந்தவற்றைக் கூறு.

| | | | |
|---|---|---|---|
| ____________ | நாகம்<br>நத்தை<br>நண்டு | ____________ | வானம்<br>வண்டு<br>வண்டி |
| ____________ | ஆமை<br>ஆந்தை<br>அணில் | ____________ | ஓடம்<br>ஓணான்<br>ஓநாய் |
| ____________ | நரி<br>நாய்<br>நாரை | ____________ | மாலை<br>மான்<br>மாடு |



4. படத்தைப் பார்; பொருள்களின் பெயர்களை எண்ணிக்கையுடன் எழுது.

இரண்டு மிதி வண்டிகள் ______ ______

______ சன்னல்கள். ______ ______

______ ______ ______ ______

5. கண்டுபிடித்து எழுது.

- மூன்று கோடுகள் முதுகில் இருக்கும் ______.
- முதுகில் வீட்டைச் சுமக்கும் ______.
- முறம் போலக் காது இருக்கும் ______.
- பாலை விரும்பிக் குடிக்கும் ______.

(பூனை, யானை, நத்தை, அணில்)

6. படத்தில் உள்ளவை பற்றி ஒவ்வொருவரும் ஒரு தொடர் கூறுக.

7. இரு குழுக்களாக அமர்க.
ஒரு குழு ஏதேனும் ஒரு சொல்லைக் கூற மற்றொரு குழு அதற்கு ஒத்த ஓசையுடைய சொல்லைக் கூறி விளையாடுக.





# 10 ஆடும் மயில்!

ஆடும் மயிலை அருவியில் பார்த்தேன்;
நானும் அதுபோல் ஆடினேன்.





தாவும் குரங்கைக் கிளையில் பார்த்தேன்;
நானும் அதுபோல் தாவினேன்.

துள்ளும் மானைத் தோட்டத்தில் பார்த்தேன்;
நானும் அதுபோல் துள்ளினேன்.








ஓடும் முயலை வயலில் பார்த்தேன்
நானும் அதுபோல் ஓடினேன்.




கூவும் குயிலை மரத்தில் பார்த்தேன்
நானும் அதுபோல் கூவினேன்.

அக்காள் பாடம் படிப்பதைப் பார்த்தேன்
நானும் அவள் போல் படித்தேன்.





**1. வினாக்களுக்கு முழுமையான தொடரில் விடையளி.**

1. சிறுமி அருவியில் எதைப் பார்த்தாள்?
2. குரங்கு என்ன செய்து கொண்டிருந்தது?
3. மானைப் பார்த்த சிறுமி என்ன செய்தாள்?
4. சிறுமி எதைப் போல் ஓடினாள்?
5. சிறுமி குயிலை எங்குப் பார்த்தாள்?

**2. சொல் அட்டைகளை இணைத்துத் தொடர் எழுது.**




**3. நண்பர்களுடன் குழுவில் செய்.**



- மானைப் போலத் துள்ளி வா!
- யானை போல அசைந்து வா!
- பறவை போலப் பறந்து வா!
- தவளை போலத் தத்தி வா!
- குதிரை போல ஓடி வா!



4. விடையைக் கண்டுபிடித்து வரை;எழுது.

• எது பறக்காது?






முயல் பறக்காது.

• எது நீரில் வாழாது?





• எது புல் தின்னாது?






5. படங்களைப் பார்த்துக் கதை சொல். கதைக்கு ஒரு தலைப்பு எழுது.









# 11 பேருந்து நிலையம்



படத்தைப் பாருங்கள். என்னென்ன
நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன?
குழுவில் ஒருவர் வினாக்கள் கேட்க,
மற்றொருவர் விடையளிக்க.



(எ-டு.) பேருந்து நிலையத்தில்
எத்தனை பேருந்துகள் உள்ளன?

1. **விவரங்களைத் திரட்டு.**

- உன் ஊரின் வழியாகச் செல்லும் பேருந்துகள் யாவை?
- அவை எங்கிருந்து வருகின்றன? எங்கே செல்கின்றன?
- பேருந்தில் பயணம் செய்திருக்கிறாயா? எங்கே சென்றாய்?
- பேருந்தைப் பற்றி நீ அறிந்த வேறு விவரங்களைக் கூறு.

2. **பேருந்துடன் தொடர்புள்ள சொற்களை எழுது.**



____________________ ____________________

____________________ ____________________

____________________ ____________________

____________________ ____________________



3. மரத்துடன் தொடர்புடைய சொற்களை எழுது.




4. குழுவில் கலந்துரையாடிப் பட்டியலிடு.

வீடு

வீட்டின் வகைகள்

________________

________________

________________

________________

வீட்டில் உள்ள பொருள்கள்

________________

________________

________________

________________

வீடு கட்டப் பயன்படும் பொருள்கள்

________________

________________

________________

5. இருவர் இருவராகப் பிரிந்து கொள்க. ஒருவரைப் பற்றி மற்றொருவர் விவரங்களைக் கேட்டு அறிக. பிறகு குழுவில் விவரங்களைப் பகிர்ந்து கொள்க.




என் நண்பனுக்கு / தோழிக்கு ...

- விருப்பமான விளையாட்டு ______________
- விருப்பமான தின்பண்டம் ______________
- விருப்பமான வண்ணம் ______________
- விருப்பமான விலங்கு ______________
- விருப்பமான பழம் ______________



# 12 மாய மாம்பழம்!

மலையடிவாரத்தில் ஒரு
மாமரம் இருந்தது.
அதன் உச்சியில் ஒரு
மாம்பழம் பழுத்துத்
தொங்கியது. அதற்கு
ஊரைச் சுற்றிப் பார்க்க
மிகுந்த ஆசை.

ஒரு நாள் காற்று
வேகமாக வீசியது.
மாம்பழம் கீழே
விழுந்தது. அதற்கு
அளவில்லாத மகிழ்ச்சி.

அது ஊரைச் சுற்றிப் பார்க்கப் புறப்பட்டது.
ஊரில் சிறுவர்கள் விளையாடிக்
கொண்டிருந்தனர்; சிலர்
அதைப் பார்த்தனர்.
"மாம்பழமே நில்! நாங்கள்
உன்னைச் சாப்பிடப்
போகிறோம்!" என்றனர்.



மாம்பழம் சிரித்தது.

'மாய மாம்பழம் நான்தானே!
மலையிலிருந்து வந்தேனே!
என்னைப் பிடிக்க முடியாதே!
எட்டி நீங்கள் செல்வீரே!'

என்று பாடிக்கொண்டே வேகமாக உருண்டு ஓடியது.

சிறுவர்கள் அதைத் துரத்தினர்.



மாம்பழம் அருகில் இருந்த தோட்டத்திற்குள் புகுந்தது. அங்கிருந்த சிறுமியர் "மாம்பழமே நில்! நாங்கள் உன்னைச் சாப்பிடப் போகிறோம்!" என்றனர்.

உடனே மாம்பழம்,

“மாய மாம்பழம் நான்தானே!
மலையிலிருந்து வந்தேனே!
என்னைப் பிடிக்க முடியாதே!
எட்டி நீங்கள் செல்வீரே!”

என்று பாடிக்கொண்டே வேகமாக உருண்டு ஓடியது. சிறுவரும் சிறுமியரும் அதைத் துரத்தினர். யாராலும் அதைப் பிடிக்க முடியவில்லை.



மாம்பழம் வெகு தூரம் சென்றது. அதற்குக் களைப்பு ஏற்பட்டது. ஒரு புதர் அருகே படுத்துத் தூங்கியது; தூங்கிக் கொண்டே இருந்தது. மழை பெய்தது; மாம்பழத்தை மண் மூடியது; சூரிய ஒளி அதன் மேல் விழுந்தது. நாள்கள் பல சென்றன. அதிலிருந்து முளைக் குருத்து வெளிவந்தது.

ஆம்! அது மரமாக வளரத் தொடங்கியது.

## 1. விடை கூறு.

1. கீழே விழுந்த மாம்பழம் என்ன செய்தது?
2. சிறுவர் மாம்பழத்திடம் என்ன கூறினர்?
3. மாம்பழம் கூறிய பதில் என்ன?
4. அது யாரிடமாவது அகப்பட்டதா?
5. நீ மாய மாம்பழமாக மாறினால் எங்கெங்குச் செல்வாய்? யார் யாரைப் பார்ப்பாய்?

## 2. தொடர்களை வரிசைப்படுத்தி எழுது.

- சிறுவரும் சிறுமியரும் துரத்தினர்.
- முளைக்குருத்து வெளிவந்தது.
- ஊரைச் சுற்றிப் பார்க்கப் புறப்பட்டது.
- மாம்பழம் கீழே விழுந்தது.
- ஒரு புதர் அருகே படுத்துத் தூங்கியது.

1. ______________________________.
2. ______________________________.
3. ______________________________.
4. ______________________________.
5. ______________________________.

## 3. பின்வரும் சொற்களைப் பாடப்பகுதியில் கண்டுபிடித்து அடிக்கோடிடு.

உருண்டு ஓடியது, துரத்தினர், விழுந்தது, மாம்பழமே நில், அளவில்லாத மகிழ்ச்சி, மழை பெய்தது, முளைக் குருத்து.



4. படத்திற்குப் பொருத்தமான சொல்லை வட்டமிடு; எழுது.

| | |
|---|---|
| பள்ளி<br>பல்லி<br>________ | நீளம்<br>நீலம்<br>________ |
| வாள்<br>வால்<br>________ | வளை<br>வலை<br>________ |
| வெள்ளம்<br>வெல்லம்<br>________ | தழை<br>தலை<br>________ |
| மலை<br>மழை<br>________ | தவலை<br>தவளை<br>________ |

5. கட்டங்களை நிரப்பு; சொற்களைப் படி.
















6. பொருத்தமான சொல்லை எடுத்து எழுது.

- ____________ குலை குலையாய்க் காய்க்கும்.
  (வாழை, கொய்யா)
- ____________ பளபளப்பாக இருக்கும்.
  (கண்ணாடி, மரப்பலகை)
- ____________ வழுவழுப்பாக இருக்கும்.
  (செங்கல், கூழாங்கல்)
- ____________ சலசலவென்று ஓடும்.
  (ஆறு, குளம்)

# 13 சேர்ந்து செய்வோம்!



துண்டுத் தாள்கள் கிடந்தன
தூக்கி வீசி எறிந்தனர்!
கண்டு சிறுவன் எடுத்தனன்
கப்பல் செய்து மகிழ்ந்தனன்!



துண்டுத் துணிகள் கிடந்தன
தூக்கி வீசி எறிந்தனர்!
கண்டு சிறுமி எடுத்தனள்
கணக்காய்ப் பொம்மை செய்தனள்!

வண்ணத் தாள்கள் கிடந்தன
வாரி வீசி எறிந்தனர்!
சின்னப் பையன் கண்டனன்
சேர்த்துப் பூக்கள் செய்தனன்!





சிறிய துரும்பும் நமக்குமே
சிறந்த பொருளாய் மாறுமே!
சின்னஞ் சிறுவர் நாமுமே
சேர்ந்து பொருள்கள் செய்வோமே!

❊ **பாடலைக் குழுவாகவும் தனியாகவும் உரிய சைகைகளுடன் பாடச்செய்க.**



1. **காகிதச் சட்டை உருவாக்குவோம்!**



- செய்தித்தாள் ஒன்றை எடுத்துக் கொள்.
- அதைக் கொண்டு காகிதக் கப்பல் ஒன்று செய்.





- வலப்பக்க ஓரத்தைக் கிழித்துவிடு.



- இடப்பக்க ஓரத்தையும் கிழி.



- கத்தி போன்ற நடுப்பகுதியின் முனைப் பகுதியையும் கிழித்துவிடு.



- பிரித்துப் பார்; ஆ! காகிதச் சட்டை. எல்லாரும் புதிய சட்டையை அணிந்து கொள்வோமா!

2. **துண்டுத்தாள்கள், செய்தித்தாள்கள், காலி அட்டைப் பெட்டிகள், ஓலை போன்றவற்றைச் சேகரி. குழுவில் கலந்துரையாடி எளிய பொருள்கள் செய்க.**
**வகுப்பறையில் கண்காட்சி அமைக்க.**

# 14 வெற்றிப் பதக்கம்



ஆசிரியர் சில செய்தித்தாள்களை எங்களிடம் கொடுத்தார். நாங்கள் மூன்று குழுக்களாகப் பிரிந்தோம். சில செய்தித் தலைப்புகளை வெட்டி எடுத்தோம்; அவற்றை அட்டைகளில் ஒட்டினோம்.

சிட்னி ஒலிம்பிக் விளையாட்டு போட்டியில்

**இந்தியாவுக்கு முதல் பதக்கம்**

பளு தூக்கும் வீராங்கனை மல்லேஸ்வரி வெண்கலம் வென்றார்

திருக்குறளை மனப்பாடமாக ஒப்புவித்த

**23 மாணவ-மாணவிகளுக்கு தலா ரூ.1,000 பரிசு**

1330 குறள்களையும் ஒப்புவிக்கும் 7 வயது சிறுமி

கம்ப்யூட்டர் மேதையான 2½ வயது சிறுவன்

திருச்சியில் இருந்து சென்னைக்கு
10 மணி நேரத்தில் சைக்கிளில் பயணம்
பள்ளிக்கூட மாணவன்
சாதனை

வீரச் செயல் புரிந்த
3 பேருக்கு
அண்ணா பதக்கம்

செவ்வாய் கிரகத்தில்
தண்ணீர் இருக்கிறது
விஞ்ஞானிகள் கண்டுபிடிப்பு

ஒட்டிய செய்திகளை ஒவ்வொரு குழுவாகப் படித்தோம்; மகிழ்ந்தோம்.

அதன் பிறகு, முதல் குழுவினர் ‘க’ என்ற எழுத்தில் தொடங்கும் சொற்களை எழுதினோம். இரண்டாம் குழுவினர் ‘ச’ என்ற எழுத்தில் தொடங்கும் சொற்களையும், மூன்றாம் குழுவினர் ‘ப’ வில் தொடங்கும் சொற்களையும் எழுதினர். அதிக எண்ணிக்கையில் சொற்களை எழுதிய குழுவை ஆசிரியர் பாராட்டினார்.

※ இதுபோன்ற செயல்களை வகுப்பறையில் நடத்துக.
※ விளம்பரங்கள், அழைப்பிதழ்கள், சுவரொட்டிகள் போன்றவற்றைச் சேகரித்துப் படிக்கச்செய்க.

4

## மேரியின் பையில் இருப்பது என்ன?

வட்டத்தில் உள்ள எழுத்துகளைக் கட்டத்தில் அடித்துவிடு. மேரியின் பையில் இருப்பவற்றை அறிவாய்.



(க, ச, ர, ட)

| | | | |
|---|---|---|---|
| க | ட | ச | க |
| ர | ப | க | ச |
| ச | ட | ழ | ச |
| ர | க | ர | ட |
| ட | ச | க | ம் |

பழம்

(நீ, த, கு, ம)

| | | | |
|---|---|---|---|
| நீ | கு | த | ம |
| த | ம | ப | நீ |
| கு | த | நீ | கு |
| ம | நீ | ந் | த |
| ம | கு | நீ | து |

__________

(ப, பு, ந, ற)

| | | | |
|---|---|---|---|
| ப | ந | ற | பு |
| ந | பு | ற | ப |
| ப | ந | பூ | பு |
| ற | ந | ப | பு |
| பு | ப | ற | ந |

__________

(கீ, ல, கி, யு)

| | | | |
|---|---|---|---|
| கீ | ல | கி | வ |
| கி | கீ | ல | யு |
| ல | ளை | கி | யு |
| யு | கி | ய | ல |
| கீ | ல் | ல | கி |

__________

# 15 மரம் வளர்ப்பேன்



தாத்தா வைத்த தென்னையுமே
தலையால் இளநீர் தருகிறது.

பாட்டி வைத்த கொய்யாவும்
பழங்கள் நிறையக் கொடுக்கிறது.

அப்பா வைத்த மாஞ்செடியோ
அல்வா போலப் பழம்தருது.

அம்மா வைத்த முருங்கையுமே
அளவில் லாமல் காய்க்கிறது.

அண்ணன் வைத்த மாதுளையோ
கிண்ணம் போலப் பழுக்கிறது.



சின்னஞ் சிறுவன் நானுமொரு
செடியை நட்டு வளர்ப்பேனே!

**அழ. வள்ளியப்பா**

* பாடலைச் சரியான ஒலிப்புடனும் சந்த நயத்துடனும் பாடச் செய்க.

1. பொருத்திப் படி; எழுது.

| அப்பா | தென்னை | |
|---|---|---|
| அம்மா | கொய்யா | |
| அண்ணன் | மாஞ்செடி | நட்டார் |
| தாத்தா | மாதுளை | |
| பாட்டி | முருங்கை | |

2. படத்தில் காணும் செயல்களைக் குறிக்கும் தொடர்களை மட்டும் ✓ குறியிடு.

- குழி தோண்டுகிறாள்.
- மரத்தில் ஏறுகிறான்.
- சுத்தம் செய்கிறான்.
- நீர் ஊற்றுகிறாள்.
- செடி நடுகிறான்.
- பூப் பறிக்கிறாள்.



3. சுவையையும் நிறத்தையும் கொண்டு பொருளைக் கண்டுபிடித்து எழுது; படி.

உப்பு

மிளகாய் ஆப்பிள் எலுமிச்சை பாகற்காய்

| சுவை | நிறம் | பொருள் |
|---|---|---|
| இனிப்பு | சிவப்பு | ________ |
| கசப்பு | பச்சை | ________ |
| புளிப்பு | மஞ்சள் | ________ |
| கார்ப்பு | சிவப்பு | ________ |
| உவர்ப்பு | வெள்ளை | ________ |

4. காய்கறிகள், பழங்களின் படங்கள் ஒட்டிய அட்டைகளைக் கவிழ்த்து வை. குழுவில் ஒருவர் ஒரு அட்டையை எடுத்து அதில் உள்ள பொருளின் சுவை, நிறம், வடிவம் ஆகியவற்றை விவரிக்க. மற்றவர்கள் அதன் பெயரைச் சொல்க.



## 16 குடையும் குப்புசாமியும்

பெரிய ஆலமரம். அதனடியில் ஒரு நாற்காலி. குப்புசாமி அதில் உட்கார்ந்தார்.

சுண்டல் பொட்டலத்தைப் பிரித்தார். அப்போது வானம் இருண்டது; தூறல் விழத் தொடங்கியது.

குப்புசாமி குடையை விரித்தார். பெரு மழை பெய்தது; வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது; வெள்ளம் குப்புசாமியைக் குடையோடு அடித்துச் சென்றது.



அதோ...! கடல்...! கடல்...!

வாயைத் திறந்து கொண்டு
பெரிய திமிங்கலம்.



குப்புசாமி திமிங்கலத்தின் வாய்க்குள் சென்றார். உள்ளே சென்ற குப்புசாமி திமிங்கலத்தின் வயிற்றில் ஓங்கி உதைத்தார்.

திமிங்கலம் 'ப்பூ!' என்று உமிழ்ந்தது.

குப்புசாமி வானத்தில் பறந்தார்.





மழை நின்றது; காற்றின்
வேகமும் குறைந்தது;

குப்புசாமி மெல்ல மெல்லத்
தரை இறங்கினார்.

அங்குக் கட்டியிருந்த வலையில்
'தொப்'பென்று விழுந்தார்.

'அப்பாடா! இனிச் சுண்டல் சாப்பிடலாம்!'
சுவைத்துச் சாப்பிடத் தொடங்கினார் குப்புசாமி.

1. **வரிசை மாறியுள்ள தொடர்களை வரிசைப்படுத்தி எழுது.**

- திமிங்கலம் 'ப்பூ'- என்று உமிழ்ந்தது.
- குப்புசாமி நாற்காலியில் அமர்ந்திருந்தார்.
- திமிங்கலத்தின் வாய்க்குள் குப்புசாமி சென்றார்.
- அவர் தரை இறங்கினார்.
- அவரை வெள்ளம் அடித்துச் சென்றது.

2. **சொல்லின் இறுதியில் ஒரே ஓசை கொண்டு வரும் சொற்களைக் கதையிலிருந்து எடுத்து எழுது.**

விரித்தார், பிரித்தார்,

3. **படத்தைப் பார். நிகழ்ச்சிகளைத் தொகுத்துக் கதை கூறு.**









4. படத்துடன் சொற்களை இணைத்துத் தொடராக்கு.

உண்மையானது என்றால் (மரம்) வரை.

கற்பனை என்றால் (பூ) வரை.

 இருந்து  குதித்தது ______

 சுற்றி  பறந்தது. ______

 பறந்து  சென்றது. ______

 உள்ளே  இருந்தது. ______

 ஓடிவந்து  தின்றது. ______



# 17 ஆற்றைக் கடந்த குட்டிக்குதிரை



“அம்மா! அம்மா! நான்தான் பெரியவனாக வளர்ந்து விட்டேனே! உங்களுக்கு ஏதாவது உதவி செய்யட்டுமா?” என்றது குட்டிக் குதிரை.

“ஓ! தாராளமாக. இந்தச் சிறிய நெல் மூட்டையை அரிசி ஆலையில் இறக்கிவிட்டு வருகிறாயா” என்றது தாய்க் குதிரை.

குட்டிக் குதிரைக்கு ஒரே மகிழ்ச்சி. அது நெல் மூட்டையைச் சுமந்து சென்றது.

வழியில் ஓர் ஆறு.

'ஆற்றின் ஆழம் அதிகமாக இருக்குமோ!' ஆற்றைக் கடக்கத் தயங்கியது குட்டிக் குதிரை...

'யாரிடம் கேட்கலாம்?' திரும்பிப் பார்த்தது.

அருகே ஒரு காளைமாடு புல் மேய்ந்து கொண்டிருந்தது.

"காளை அண்ணா! காளை அண்ணா! இந்த ஆற்றை என்னால் கடக்க முடியுமா?"

"ஓ! தாராளமாக. என் முழங்கால் வரைதான் தண்ணீர் உள்ளது. நீ எளிதில் ஆற்றைக் கடக்கலாம்".

குட்டிக் குதிரை ஆற்றில் இறங்கச் சென்றது.

நில்! ஆற்றில் இறங்காதே". குரல் வந்த திசை நோக்கிக் குட்டிக் குதிரை திரும்பிப் பார்த்தது.



மரத்தின் அடியில் கீரி.

“இந்தக் காளை சொல்வதை நம்பாதே! நேற்று என் நண்பனை இந்த ஆறு அடித்துச் சென்றுவிட்டது” என்றது கீரி.

குட்டிக் குதிரைக்கு மீண்டும் குழப்பம்.
‘ஆற்றைக் கடப்பதா, வேண்டாமா!’

அம்மாவிடம் சென்றது; நடந்ததைக் கூறியது; தாய்க் குதிரை சிரித்தது.

“காளை எவ்வளவு பெரியது! கீரி எவ்வளவு சிறியது! சிந்தித்துப் பார். ஆற்றை உன்னால் கடக்க இயலுமா இயலாதா என்பது உனக்கே புரியும்” என்றது தாய்க் குதிரை.

குட்டிக் குதிரையின் குழப்பம் நீங்கியது. மூட்டையுடன் ஆற்றைக் கடந்தது.



1. விடை கூறு.

1. குட்டிக் குதிரை எங்கே சென்றது?
2. அது ஆற்றைக் கடக்கத் தயங்கியது ஏன்?
3. யார், யாரிடம் சொன்னது? ஏன்?
   - 'நீ எளிதில் ஆற்றைக் கடக்கலாம்'.
   - 'நில்! ஆற்றில் இறங்காதே'.
4. தாய்க் குதிரை, குட்டிக் குதிரைக்குக் கூறிய அறிவுரை யாது?

2. சொற்களைச் சரியான ஒலிப்புடன் படி.

| | | | |
|---|---|---|---|
| அறை | கரை | ஆறு | கரி |
| கறை | திரை | கூறு | விரி |
| மறை | நரை | நூறு | சரி |
| சிறை | தரை | ஏறு | வரி |

3. குழுவில் கலந்துரையாடு; பட்டியலிடு.

| கீரியைவிடப் பெரிய விலங்குகள் | கீரியைவிடச் சிறிய விலங்குகள் |
|---|---|
| | |





4. சொற்களை இணைத்துத் தொடராக்கு.

| | | |
|---|---|---|
| காகம் | | காகம் பறந்தது |
| தாமரை | | ________ |
| பருந்து | பறந்தது | ________ |
| மல்லிகை | மலர்ந்தது | ________ |
| முல்லை | | ________ |
| குருவி | | ________ |

5. நடுவில் உள்ள எழுத்தை நீக்கு. கிடைக்கும் புதிய சொல்லை எழுது.

அவரை அரை | தவளை ____
கழுதை ____ | பாடல் ____
ஆண்டு ____ | பஞ்சு ____
கடல் ____ | கூண்டு ____

6. கோடிட்ட இடத்தை நிரப்பு.

கோழி ஒரு ________.

அதற்குச் ________ உண்டு.

ஆனால் ________ பறக்க முடியாது.

அது ________, ________, சோளம்

முதலியவற்றை உண்ணும்.



அரிசி, புழு, பறவை, சிறகுகள், உயரத்தில்

## 7. விளையாடுவோம்!



வட்டமாக நில்லுங்கள்; உங்களில் ஒருவர் ஒரு பறவையின் பெயரைச் சொல்ல மற்றவர் '**பறபற**' என்று கூறிக் கொண்டு பறப்பது போலச் சுற்றி வருக.

விலங்குகளின் பெயர் சொன்னால் '**நடநட**' என்று கூறிக் கொண்டு வட்டத்தில் நடந்து செல்க. மாற்றிச் செய்பவர் விளையாட்டிலிருந்து விலகி அமர்க.

## 8. செய்து பார்.









# 18 காண்போம்! கற்போம்!




**வினாக் கேட்பவர்:** வணக்கம்!

வினாக்களை நன்கு கவனித்து விடை கூறுங்கள்.



யாருடைய பிறந்த நாளைக் 'குழந்தைகள் நாள் விழா'வாகக் கொண்டாடுகிறோம்?

**மாணவர்:** ஜவஹர்லால் நேரு.

**வினாக் கேட்பவர் :** சரியான விடை. நேருவுக்குப் பிடித்த மலர் எது?

**மாணவர் :** ரோஜா.

**வினாக் கேட்பவர் :** நன்று. யாருடைய பிறந்த நாளை 'ஆசிரியர் நாளா'கக் கொண்டாடுகிறோம்?



**மாணவர் :** டாக்டர் எஸ்.இராதாகிருஷ்ணன்.



**வினாக் கேட்பவர் :** 'பேரறிஞர்' எனப் பாராட்டப்படுபவர் யார்?

**மாணவர் :** அறிஞர் அண்ணா.

**வினாக் கேட்பவர் :** 'ஓடி விளையாடு பாப்பா' பாடலைப் பாடியவர் யார்?

**மாணவர் :** பாரதியார்.



**வினாக் கேட்பவர் :** 'ஜெய்ஹிந்த்' என்று வீர முழக்கமிட்டவர் யார்?

**மாணவர் :** நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ்.



**வினாக் கேட்பவர் :** அருமையாகப் பதில் கூறினீர்கள். பாராட்டுகள்! வணக்கம்.

1. **தலைவர்களின் படங்களைச் சேகரி. ஒரு தாளில் ஒட்டி அவர்களின் பெயர்களை எழுது.**

2. **இவ்விழாக்கள் வரும் நாள்களை நாள்காட்டியிலிருந்து கண்டுபிடித்து எழுது.**

- காந்தி பிறந்த நாள் ________________
- குழந்தைகள் நாள் ________________
- ஆசிரியர் நாள் ________________
- விடுதலை நாள் ________________

3. **உன் பிறந்த நாள் எது?** ________________

4. **விவரங்களைப் படித்து விடையளி.**

காந்தியடிகளின் முழுப் பெயர் மோகன்தாஸ் கரம்சந்த் காந்தி.

இவர் குஜராத் மாநிலத்தில் உள்ள போர்பந்தரில் அக்டோபர் இரண்டாம் நாள் பிறந்தார்.

இவரைத் 'தேசத் தந்தை' என்று போற்றுகிறோம்.



- காந்தியடிகளின் முழுப்பெயர் ________________
- அவர் பிறந்த நாள் ________________
- அவர் பிறந்த மாநிலம் ________________

5. **உனக்குப் பிடித்த தொலைக்காட்சி நிகழ்ச்சிகளைக் கூறு.**

6. **வட்டத்திலுள்ள எழுத்துகளைச் சொற்களில் அடிக்கோடிடு.**

| | | | |
|---|---|---|---|
| ஸா | அஸ்ஸாம் | ஒரிஸ்ஸா | குஜராத் |
| ஜ | ஜயப்பன் | ஜவஹர் | ஜப்பான் |
| ஹ | ஹமீது | ஹர்ஷர் | தாஜ்மஹால் |
| ஸ்ரீ | ஸ்ரீதரன் | ஸ்ரீரங்கம் | ஸ்ரீதேவி |
| ஞா | ஞாயிறு | ஞானம் | ஞாலம் |

7. **படித்துப் பழகு.**

பஞ்சாப் செல்லலாம்
பஞ்சுமிட்டாய் வாங்கலாம்.

ராமேஸ்வரம் செல்லலாம்
ரஸகுல்லா வாங்கலாம்.

குஜராத் செல்லலாம்
குலோப்ஜாமுன் வாங்கலாம்.

ஸ்ரீரங்கம் செல்லலாம்
சீனிமிட்டாய் வாங்கலாம்.

தேடித் தேடி வாங்கியே
கூடிக் கூடித் தின்னலாம்.



# 19 புழு எங்கே...?

தோட்டத்தில் அணில் விளையாடிக் கொண்டிருந்தது. அருகே புழு ஒன்று இலையைத் தின்று கொண்டிருந்தது.

'இந்தப் புழு எங்கிருந்து வந்தது?' அணில் சிந்தித்தது.





புழுவின் அருகில் சென்று, "நண்பா, வா! இருவரும் விளையாடலாம்" என்று அழைத்தது. புழு பேசவில்லை. இலையைத் தின்றுகொண்டே இருந்தது.



தேனீ ஒன்று பறந்து வந்தது;
புழுவைப் பார்த்தது.

“இப்படித் தின்றுகொண்டே இருந்தால் பருத்துவிடுவாய். உன்னால் நகரக்கூட முடியாது. என்னைப் பார்! மெலிதாக உள்ளேன். எளிதாகப் பறக்கிறேன்” என்றது.

புழு ஒன்றுமே பேசவில்லை. இலையைத் தின்று கொண்டே இருந்தது.



புழுவின் உடல் பருத்தது; நிறம் மாறியது. நாள்கள் சில சென்றன. அணில், தேனீ இரண்டும் புழுவைத் தேடின. ஆனால் புழு இருந்த இடத்தில் கூடு ஒன்று இருந்தது. புழு எங்கே..!

“புழுவிற்கு என்ன ஆயிற்று?” என்றது அணில்.



“கூடாக மாறி விட்டதோ?” என்றது தேனீ.



நாள்கள் சில சென்றன. ‘டப்’ என்ற சத்தம் கேட்டது. அணிலும் தேனீயும் கூடு இருந்த இடத்திற்கு விரைந்து வந்தன.

கூடு உடைந்திருந்தது. என்ன ஆச்சரியம்! அதிலிருந்து வண்ணச் சிறகுகளுடன் பூச்சி ஒன்று வெளியே வந்தது; வானில் பறந்தது.

‘ஆ .... வண்ணத்துப் பூச்சி!’



**1. விடை கூறு.**

1. புழு எதைத் தின்று கொண்டிருந்தது?
2. அணில் புழுவிடம் என்ன கூறியது?
3. "தின்று கொண்டே இருந்தால் பருத்துவிடுவாய்" - என்று கூறியது யார்?
4. புழு என்னவாக மாறியது?

**2. வரிசை மாறியுள்ள சொற்றொடர்களை வரிசைப்படுத்தி எழுது.**

- வானில் பறந்தது.
- கூட்டுக்குள் ஓய்வெடுத்தது.
- அதன் உடல் பருத்தது.
- வண்ணத்துப் பூச்சியாக வெளியே வந்தது.
- புழு இலைகளைத் தின்றது.

1. ______________________
2. ______________________
3. ______________________
4. ______________________
5. ______________________

**3. இறுதியில் ஒத்த ஓசை வரும் சொற்களைப் பாடத்திலிருந்து எடுத்து எழுது.**

நினைத்தது, வந்தது, ______________________

4. கோடிட்ட இடத்தை நிரப்பு.




- வண்ணத்துப் பூச்சி பல ______________ காணப்படும்.
- இதற்கு வண்ணச் ________ உள்ளன.
- இதற்கு ஆறு ____________ உண்டு.
- இது பார்ப்பதற்கு மிக ____________ இருக்கும்.
- இது பூக்களில் அமர்ந்து ____________ உறிஞ்சும்.

5. சொற்களை இணைத்துத் தொடர் உருவாக்கு.

குரங்கு - கண்ணாடி தாத்தா - பெட்டி
பானை - பந்து பூனை - பாட்டி

6. கட்டத்தில் மறைந்துள்ள சொற்களை எழுது.

________ ________ ________

________ ________ ________

________ ________ ________



7. சரியான படத்தை ✓செய். பெயரை எழுது.



நான் பறப்பேன்.
எனக்குச் சிறகுகள் உள்ளன.
தேன் குடிப்பேன்.

________________



வெளிச்சம் தருவேன்.
வானில் இருப்பேன்.
பகலில் தெரிவேன்.

________________



எனக்கு நான்கு கால்கள்.
நடந்து செல்வேன்.
எலியைப் பிடிப்பேன்.

________________



என் சுவை இனிப்பு.
செடியில் காய்ப்பேன்.
சிவப்பு நிறமாய் இருப்பேன்.

________________

8. படங்களில் உள்ள செயல்களுக்குரிய சொல்லின் பகுதியை அறிந்து எழுது.

ஆடுகிறாள், சிரிக்கிறான், பாடுகிறாள், அழுகிறான், வரைகிறாள், குதிக்கிறாள், படிக்கிறான்



ஆடு



சிரி



____



____



____



____



____

# 20 குட்டி முயல்



குட்டி முயல் எப்போதும் சிந்தித்துக் கொண்டே இருக்கும்.

எதைச் சாப்பிடுவது?
மீனைச் சாப்பிடுவதா?
முள்ளங்கியைச் சாப்பிடுவதா?
புழுக்களைச் சாப்பிடுவதா?



எங்கே வாழ்வது?
குகையில் வாழ்வதா?
கூட்டில் வாழ்வதா?
குன்றில் வாழ்வதா?

பறவைகள் மரத்தில் இருப்பதைக் குட்டி முயல் பார்த்தது. தானும் தாழ்ந்த கிளையில் ஏறிக் கொண்டது. அணில் பழம் தின்பதைப் பார்த்தது. தானும் பழம் தின்றது.



ஒரு நாள் காட்டில் ஒரே பரபரப்பு. விலங்குகள் எல்லாம் ஓடி ஒளிந்தன.

ஓநாய் ஒன்று குட்டி முயலின் அருகே வந்தது. குட்டி முயல் அதைப் பார்த்து,

"நீ யார்?
நரியா?
நாயா?
பூனையா?" என்றது.

"இல்லை. நான் தான் ஓநாய்" என்றது.

"நீ குகையில் வாழ்கிறாயா?
பொந்தில் வாழ்கிறாயா?
புற்றில் வாழ்கிறாயா?"
என்று கேட்டது குட்டி முயல்.

"நான் காட்டில் வாழ்கிறேன்" என்றது ஓநாய்.



"நீ பழங்களைச் சாப்பிடுவாயா?
கிழங்குகளைச் சாப்பிடுவாயா?
புல்லைச் சாப்பிடுவாயா?" என்று
கேட்டது குட்டி முயல்.

"இல்லை, நான் உன்னைப் போன்ற முயல்களைத் தான் விரும்பிச் சாப்பிடுவேன்" என்று கூறிக்கொண்டே ஓநாய் குட்டி முயலை நெருங்கியது.

குட்டி முயல் அதிர்ச்சி அடைந்தது. ஒரு நொடி சிந்தித்தது. தப்பி ஓட நினைத்தது.

எப்படித் தப்பியிருக்கும்?

1. **விடை எழுது.**



1. முயல் எதை எதைச் சாப்பிடலாம் என்று எண்ணியது?
2. எங்கெங்கு வாழலாம் என்று முயல் சிந்தித்தது?
3. காட்டில் ஏன் பரபரப்பு ஏற்பட்டது?
4. ஓநாய் எதை விரும்பிச் சாப்பிடுவதாகக் கூறியது?

2. **படத்தைப் பார்த்துக் குழுவில் ஒருவர் ஒரு பெயரைச் சொல்ல, மற்றவர் அச்சொல்லை உரிய கட்டத்தில் எழுதுக.**

| விலங்குகள் | மலர்கள் | பறவைகள் |
|---|---|---|
| | | |



3. **படத்தைப் பார். சொற்களை உரிய வரிசையில் எழுது.**

க   கதவு, ______________________

ப   ______________________

பா   ______________________

4. **வரைந்து பழகு!**

ஒரு ◯ வரை! அந்த வட்டத்தைக் கொண்டு என்ன உருவம் வரையலாம் என்று சிந்திக்க.

கமலா ☼ வரைந்தாள்.

பாண்டியன் [பறவை] வரைந்தான்.

வட்டங்களைக் கொண்டு நீயும் இதுபோல் பல படங்களை வரை; பெயர்களை எழுது.

5. சொற்களைப் படித்து அதன் பகுதியை எழுது.



| சொல் | பகுதி |
| --- | --- |
| பார்த்தாள் | பார் |
| செய்தான் | செய் |
| வரைந்தாள் | ________ |
| படித்தான் | ________ |
| கொடுத்தான் | ________ |
| உண்கிறாள் | ________ |
| அணிந்தான் | ________ |
| தூங்குவார் | ________ |
| நடந்தார் | ________ |



6. கொடுக்கப்பட்டுள்ள இடங்களில் வாழும் உயிரினங்களை அதற்குரிய இடத்தில் வரை.









## 21 புதருக்குள் புதிர்...!

நரி : புதர் அசைகிறதே! பின்னால் ஏதோ இருக்கிறது!

முயல் : ஆமாம் எனக்கும் ஏதோ ஓசை கேட்கிறது!

குருவி : எட்டிப் பார்ப்போமா?

முயல் : வா, அருகில் செல்வோம்.

கரடி : வேண்டாம்! வேண்டாம்! இங்கிருந்தே பார்க்கலாம்.



நரி : ஆ! பளபளக்கும் கண்கள்!

குருவி : ஆந்தையா?

நரி : இல்லை, கூர்மையான பற்களும் இருக்கின்றன.

குரங்கு : ஐயோ! முதலையா?

நரி : இல்லை! தடித்த கால்கள் இருக்கின்றன.

முயல் : பெரிய வயிறு இருக்கிறதா?

நரி : ஆமாம்! ஆமாம்!

கரடி : யானையாகத்தான் இருக்க வேண்டும்.

நரி : இல்லை! இல்லை! நீண்ட வால் உள்ளதே!



அப்போது புதரின் பின்னாலிருந்து
பெரிய உருவம் ஒன்று வெளியே வந்தது.

விலங்குகள் நடுங்கின;
தலை தெறிக்க ஓடின.

ஐயோ!

அம்மா

ஓடு, ஓடு..!

## 1. விடை எழுது.

1. புதருக்குள் இருந்த விலங்கு எது?
2. அதைப் பார்த்ததும் விலங்குகள் என்ன செய்தன?
3. டைனோசரஸிற்கு,

<u>பளபளக்கும்</u> கண்கள். __________ வயிறு.

__________ பற்கள். __________ கால்கள்.

__________ வால்.

## 2. கோடிட்ட இடத்தை நிரப்பு.

(நீளமாக, சிறியதாக, தூண், பானை, முறம்)

- யானையின் வயிறு ________ போன்று இருக்கும்.
- இதன் கால்கள் ________ போன்று இருக்கும்.
- கண்கள் ________ இருக்கும்.
- காதுகள் ________ போன்று இருக்கும்.
- துதிக்கை ________ இருக்கும்.



3. எதிர்ச் சொற்களைக் கட்டத்திற்குள் வட்டமிடு / எடுத்து எழுது.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| உ | கு | ட் | டை | யா | ன |
| அ | ஏ | சி | றி | ய | ஆ |
| மெ | ல் | லி | ய | ஈ | ஊ |
| இ | கு | று | க | லா | ன |

பெரிய x ____________

அகலமான x ____________

உயரமான x ____________

தடித்த x ____________

4. பொருத்தமான சொல்லை எழுது.



____________ கயிறு

____________ கயிறு





____________ பானை



____________ பானை

____________ பாதை





____________ பாதை

## 5. கதை கூறுவோம்.



ஒருவர் ஒரு சொற்றொடர் கூறி ஒரு கதையைத் தொடங்குக. ஒவ்வொருவரும் ஒரு சொற்றொடரைக் கூறிக் கதையைத் தொடர்க.

(எ-டு.) **ராதா** : ஓர் அடர்ந்த காடு...

**சேகர்** : அங்கு ஒரு...

## 6. கண்டுபிடி.

படத்தைப் பார். உனக்குப் பிடித்த ஒன்றை நினைத்துக் கொள். அதைப் பற்றி மூன்று தொடர்களைக் கூறு. நீ நினைத்தது என்ன என்பதை உன் நண்பரைக் கண்டுபிடிக்கச் சொல்.

(எ-டு) நான் வேகமாக ஓடுவேன். என் உடலில் அழகிய புள்ளிகள் இருக்கும். - நான் யார்?

**மான்**

# 22 பசுவும் கன்றும்

தோட்டத்தில் மேயுது
வெள்ளைப் பசு - அங்கே
துள்ளிக் குதிக்குது
கன்றுக் குட்டி.

அம்மா என்குது
வெள்ளைப் பசு - உடன்
அண்டையில் ஓடுது
கன்றுக் குட்டி.

நாவால் நக்குது
வெள்ளைப் பசு - பாலை
நன்றாய்க் குடிக்குது
கன்றுக் குட்டி.

முத்தம் கொடுக்குது
வெள்ளைப் பசு - மடி
முட்டிக் குடிக்குது
கன்றுக் குட்டி.

- கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை



# 23 மணிப் பேச்சு!



**தாமரை :** மாமா, வாருங்கள்.

(அப்போது கிக்கீ... கிக்கீ... என்று கிளி கீச்சிட்டது. மாமா திரும்பிப் பார்த்தார்).

**மாமா :** தாமரை! கிளி வளர்க்கிறாயா?

**தாமரை :** ஆம், மாமா!
மாமாவுக்கு வணக்கம் சொல் மணி!

**கிளி :** வா! வா! வணக்கம்!

**தாமரை :** மணி, பெரியவர்களுக்கு இப்படி வணக்கம் சொல்லக் கூடாது.

**கிளி :** எப்படிச் சொல்ல வேண்டும்?

**தாமரை** : 'வாருங்கள்! வணக்கம்!' என்று சொல்ல வேண்டும்.

**கிளி** : வாருங்கள்! வணக்கம்!

**தாமரை** : மணி! மாமாவை உட்காரச் சொல்!

**கிளி** : உட்கார்.

**தாமரை** : அப்படி இல்லை மணி! 'உட்காருங்கள்', என்று பணிவாகக் கூறவேண்டும்.

**கிளி** : உட்காருங்கள்!

**மாமா** : அழகாகப் பேசுகின்றதே!

(மாமா கொய்யாப் பழம் ஒன்றைக் கிளியிடம் கொடுத்தார்)

**தாமரை** : மாமாவுக்கு 'நன்றி' சொல் மணி.

**கிளி** : நன்றி! நீ சாப்பிட்டாயா?



மரை : அப்படி இல்லை மணி. 'நீங்கள் சாப்பிட்டீர்களா?' என்று கேட்க வேண்டும்.

கிளி : நீங்கள் சாப்பிட்டீர்களா?

மாமா : சாப்பிட்டு விட்டேன். மணி மணியாகப் பேசுகிறதே! அதனால்தான் 'மணி' என்று பெயர் வைத்தாயோ?

தாமரை! நான் போய் வரட்டுமா?

தாமரை : போய் வாருங்கள் மாமா!

கிளி : போய் வாருங்கள்! வணக்கம்.



1. **விடை கூறு:-**

1. தாமரை வீட்டிற்கு வந்தவர் யார்?
2. தாமரை வளர்த்து வந்த பறவை எது?
3. மாமாவைத் தாமரை எப்படி வரவேற்றாள்?
4. மாமா கிளிக்கு என்ன கொடுத்தார்?
5. பழத்தைப் பெற்றுக் கொண்ட கிளி என்ன கூறியது?

2. மாறியுள்ள எழுத்துகளை வரிசைப்படுத்திச் சொற்களை எழுது.

1. ண க் வ க ம்
2. ரு ங் வா க ள்
3. கா உ ட் ரு ள் க ங்
4. றி ந ன்

3. உரையாடலை நிரப்பிப் படி:












# 24 குருவியின் முயற்சி



மழைக்காலம்.
பெருமழை பெய்தது.
குருவிக் குஞ்சுகள் குளிரால்
நடுங்கின. தாய்க்குருவி மனம்
வருந்தியது; நெசவாளரிடம்
பறந்து சென்றது.



**குருவி** : என் குஞ்சுகள் குளிரால் நடுங்குகின்றன. ஒரு போர்வை தாருங்கள்.

**நெசவாளர்** : தற்போது என்னிடம் போர்வை இல்லை. நூல் கொண்டு வா! நெய்து தருகிறேன்.

(குருவி நூல் நூற்பவரிடம் சென்றது)

**குருவி** : ஐயா! நூல் தாருங்கள். நூலை நெசவாளரிடம் கொடுப்பேன். நெசவாளர் போர்வை நெய்து தருவார்.



போர்வையைக் குளிரால் நடுங்கும்
என் குஞ்சுகளுக்குப்
போர்த்துவேன்.

**நூல் நூற்பவர் :** என்னிடம் பஞ்சு இல்லை.
பஞ்சு கொண்டு வா!
நூல் நூற்றுத் தருகிறேன்.

குருவி, பருத்திக் காட்டிற்குச் சென்றது.
ஆனால், அங்குப் பஞ்சு இல்லை.
கவலையுடன் ஒரு மரத்தில் அமர்ந்தது.

(வளையிலிருந்து ஓர் எலி எட்டிப் பார்த்தது.)

**எலி** : ஏன் கவலையாக இருக்கிறாய்?
உனக்கு என்ன வேண்டும்?

**குருவி** : பஞ்சு வேண்டும்.

**எலி** : பஞ்சு எதற்கு?

**குருவி** : பஞ்சை நூல் நூற்பவரிடம்
கொடுப்பேன். அவர் நூல் நூற்றுத்
தருவார். நூலை நெசவாளரிடம்
கொடுப்பேன். அவர் போர்வை
நெய்து தருவார். என்
குஞ்சுகளுக்குப் போர்வையைப்
போர்த்துவேன்.





**எலி** :கவலைப் படாதே! என் வளையில் ஏராளமாகப் பஞ்சு வைத்துள்ளேன்.

எலி வளைக்குள் புகுந்தது. பஞ்சை எடுத்து வந்து குருவியிடம் கொடுத்தது. குருவி நன்றியுடன் பஞ்சைப் பெற்றுக் கொண்டு பறந்து சென்றது.

பஞ்சைப் பெற்றுக் கொண்ட குருவி என்ன செய்திருக்கும்?

**1. விடை எழுது.**

1. குருவிக் குஞ்சுகள் ஏன் நடுங்கின?
2. தாய்க் குருவி முதலில் யாரிடம் சென்றது?
3. நெசவாளர் என்ன வேண்டும் என்று கேட்டார்?
4. நூல் நூற்பவர் கேட்டது என்ன?
5. எலி குருவிக்கு எதைக் கொடுத்தது?
6. குருவி யார்யாரிடம் சென்றது என்பதை வரிசையாகக் கூறு.

**2. இரண்டு குழுவாகப் பிரிந்து ஒரு குழு, பாடலில் உள்ள கேள்விப்பகுதியைக் கேட்க, மற்றொருகுழு விடையைக் கூறுக.**



பாட்டியம்மா பாட்டியம்மா
எங்கே செல்கிறாய்? - பசு வாங்க

பாட்டியம்மா பாட்டியம்மா
பசு எதற்கு? - பால் கறக்க

பாட்டியம்மா பாட்டியம்மா
பால் எதற்கு? - தயிர் ஆக்க

பாட்டியம்மா பாட்டியம்மா
தயிர் எதற்கு? - வெண்ணெய் எடுக்க

பாட்டியம்மா பாட்டியம்மா
வெண்ணெய் எதற்கு? - நெய் எடுக்க

பாட்டியம்மா பாட்டியம்மா
நெய் எதற்கு? - பணியாரம் செய்ய

பாட்டியம்மா பாட்டியம்மா
பணியாரம் எதற்கு? - பகிர்ந்து உண்ண

**3. வரிசைப்படுத்தி எழுது.**

நெய், பால், தயிர், வெண்ணெய், ______, ______, ______

பழம் , பிஞ்சு, காய், பூ, ______, ______, ______, ______

துணி , பஞ்சு, நூல், சட்டை, ______, ______, ______, ______

# 25 சிறுவர் காத்த சின்ன யானை

அன்று விடுமுறை ...

கண்ணன் தன் நண்பர்களுடன் விளையாடிக் கொண்டிருந்தான்.

'ஊ...ஊ...!' இது என்ன சத்தம்! எல்லாரும் விளையாட்டை நிறுத்திவிட்டுக் கவனித்தனர்.

**பாலு:** சத்தம் வயல்வெளியிலிருந்து வருகிறது.

**கண்ணன் :** வாருங்கள், போய்ப் பார்ப்போம்!

கண்ணனும் நண்பர்களும் வயலுக்கு ஓடினர். அங்கே, ஒரு குழிக்குள்ளிருந்து சத்தம் வந்தது. எல்லோரும் எட்டிப் பார்த்தனர்.



**மீனா** : ஐயோ! குட்டி யானை ஒன்று விழுந்திருக்கிறது.

**கண்ணன்:** இங்கே எப்படி வந்தது?

**பாலு** : காட்டிலிருந்து வழி தவறி இங்கே வந்திருக்கும்.

**கண்ணன்:** இப்போது நாம் என்ன செய்யலாம்?

**பாலு** : வீட்டிலிருந்து ஏணி கொண்டு வருவோம்.

**மீனா** : குட்டி யானையால் ஏணி மீது ஏறி வர முடியாதே!

**பாலு** : வேறு எப்படி அதை வெளியே கொண்டு வருவது?

**கண்ணன்:** கயிறு கட்டி மேலே இழுக்கலாமே!

**மீனா** : இவ்வளவு பெரிய யானையை நம்மால் எப்படி இழுக்க முடியும்?

**கண்ணன்:** வேறு என்ன செய்வது?

**பாலு** : பெரியவர்களிடம் சென்று கூறுவோம், வாருங்கள்!

**மீனா** : நான் இங்கேயே இருக்கிறேன். பாவம், குட்டி யானை பசியோடு இருக்கும். தின்பதற்கு ஏதாவது கொடுக்கிறேன்.

**கண்ணன்:** என்ன கொடுப்பாய்?

**மீனா** : இதோ, வயலில் இருக்கும் கரும்பை ஒடித்துக் கொடுப்பேன்!

கண்ணனும் பாலுவும் ஊருக்குள் சென்றனர்; பெரியவர்களிடம் விவரத்தைக் கூறினர்.



ஊர் மக்கள் வனக் காவலர்களை அழைத்து வந்தனர். அவர்கள் பலகைகளை வைத்துக் குட்டி யானையை மெதுவாக ஒரு வண்டியில் ஏற்றினர்.

**பாலு** : குட்டி யானையை என்ன செய்வீர்கள்?

**காவலர்** : காட்டுக்குள் கொண்டு போய் விட்டுவிடுவோம்.

**மீனா** : தயவுசெய்து அதன் அம்மாவிடம் சேர்த்துவிடுங்கள்.

குட்டி யானை துதிக்கையை உயர்த்தி மகிழ்ச்சியை வெளிப்படுத்தியது.

**1. விடை கூறு.**

1. கண்ணனும் நண்பர்களும் ஏன் விளையாட்டை நிறுத்தினர்?
2. குழிக்குள்ளே எதைப் பார்த்தனர்?
3. யானையை வெளியே கொண்டு வரப் பாலுவும் கண்ணனும் கூறிய யோசனைகள் என்ன?
4. ஊர் மக்கள் யாரை அழைத்து வந்தனர்?
5. குட்டி யானையைக் காவலர்கள் எப்படி வண்டியில் ஏற்றினர்?
6. காவலர்களிடம் மீனா என்ன கூறினாள்?

## 2. கதையைத் தொடர்ந்து கூறு.



அன்று விடுமுறை நாள். முத்துவும் தேவியும் வீட்டினருகில் உள்ள வேப்பமர நிழலில் விளையாடிக் கொண்டிருந்தனர். திடீரென்று மரத்திலிருந்து ஒரு குருவிக்குஞ்சு தொப்பென்று கீழே விழுந்தது. முத்துவும் தேவியும் அதை நோக்கி ஓடினர்.....

## 3. சிந்தித்துப் பார்.

மாதுவிடம் ஒரு புலி, ஓர் ஆடு, ஒரு புல்லுக் கட்டு இருந்தன. அவற்றை ஆற்றின் மறு கரைக்குப் படகில் எடுத்துச் செல்ல வேண்டும். ஆனால் படகில் ஒரு சமயத்தில் மாது ஏதேனும் ஒரு பொருளை மட்டுமே கொண்டு செல்ல முடியும்.

ஆட்டை விட்டுவிட்டுப் புலியை அழைத்துச் சென்றால், ஆடு புல்லைத் தின்றுவிடும். புல்லுக் கட்டை எடுத்துச் சென்றால் புலி ஆட்டைத் தின்றுவிடும். மாது எவ்வாறு மூன்றையும் பத்திரமாக ஆற்றின் மறு கரையில் சேர்த்திருப்பான்?



4. **'இருவரும் சேர்ந்து' என்ற தொடரை வைத்துப் படத்திற்குப் பொருத்தமான சொற்றொடர் கூறு; எழுது.**



அமுதனும் அப்துலும் நெருங்கிய நண்பர்கள்...





இருவரும் சேர்ந்து விளையாடுவார்கள்.





5. **சொற்களில் வரும் விகுதிகளை அறிந்து எழுது.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| படிக்கிறான் | - | ஆன் | சிரித்தாள் | - | ஆள் |
| ஓடுகிறான் | - | ஆன் | ஆடுகிறாள் | - | ஆள் |
| நடந்தான் | - | _____ | பாடுகிறாள் | - | _____ |
| தேடுவான் | - | _____ | பார்த்தாள் | - | _____ |
| வந்தார் | - | ஆர் | மேய்ந்தது | - | து |
| சென்றார் | - | ஆர் | ஓடியது | - | து |
| எடுத்தார் | - | _____ | கடித்தது | - | _____ |
| சிரித்தார் | - | _____ | தின்றது | - | _____ |

6. **பகுதியையும் விகுதியையும் இணைத்துச் சொல்லாக்கு.**

| பகுதி | விகுதி | சொல் |
|---|---|---|
| ஓடு<br>பாடு<br>தேடு | ஆன் | ஓடினான்<br>_______<br>_______ |
| குதி<br>படி<br>சிரி | ஆள் | குதித்தாள்<br>_______<br>_______ |
| எடு<br>படு<br>தடு | ஆர் | எடுத்தார்<br>_______<br>_______ |

# 26 பட அகராதி

**வண்ணத்துப் பூச்சி:**



பல வண்ணங்களில் இருக்கும். பூக்களில் உள்ள தேனை உண்ணும். தேனை உறிஞ்சிக் குடிக்கும். வாயில் நீண்ட குழல் உண்டு.

**விமானம்:**



வான வழியில் பயணம் செய்ய உதவும். விரைந்து செல்லும்.
ரைட் சகோதரர்கள் கண்டுபிடித்தனர்.
தற்காலத்தில் பலவகை விமானங்கள் உள்ளன.

**வாத்து**



பறக்க முடியாது.
கால் விரல்களுக்கு இடையே சவ்வு போன்ற தோல் உண்டு. இதன் உதவியால் நீரில் நீந்தும்.
இலை, புழு, பூச்சி, நத்தை,மீன், தானியம் முதலியவற்றை உண்ணும்.

**வீணை:**



ஒருவித இசைக் கருவி. 'யாழ்' என்று அழைக்கப்பட்டது. பலா மரத்தில் செய்யப்படும்.
கம்பிக்கருவி அல்லது நரம்புக் கருவி எனப்படும்.

பிறப்பினால் அனைவரும் சமம்

**வெட்டுக்கிளி:**



புல்வெளிகளில் தாவிப் பறந்து செல்லும் பூச்சி. பயிர்களை வெட்டிப் பாழ் செய்துவிடும். இதற்கு ஆறுகால்களும் நான்கு இறகுகளும் உண்டு.

**வைரம்:**



ஒன்பது வகை மணிகளுள் ஒன்று. மிகக் கடினமானது. நிலத்தினடியில் உள்ள கரி அழுத்தத்தாலும் வெப்பத்தாலும் வைரமாகிறது. தற்காலத்தில் செயற்கை வைரமும் கிடைக்கிறது.

**வேம்பு:**



வேப்ப மரத்தையே ‘வேம்பு’ என்கிறோம். இதன் இலை, பட்டை, வேர் அனைத்தும் கசப்பானவை. மருத்துவ குணம் மிக்கவை. இம்மரம் வீடுகட்டவும் மரச்சாமான்கள் செய்யவும் பயன்படுகிறது.

**வௌவால்:**



இது குட்டிபோட்டுப் பால் கொடுக்கும். மரத்தில் தலைகீழாகத் தொங்கும். இருட்டில் பறந்துசென்று இரைதேடும். பழங்களை விரும்பி உண்ணும்.

ஒருவர் செய்த நன்மையை மறவாதே.

1. முதல் எழுத்துகளைக் கொண்டு சொற்களை அகர வரிசைப்படுத்து.

| | | | | |
|---|---|---|---|---|
| தாள், | தை, | திண்ணை, | தவளை, | தேனீ, |
| தோகை, | தீபாவளி, | துவரை, | தொட்டில், | |
| தூய்மை, | தென்னை. | | | |

______ ______ ______
______ ______ ______
______ ______ ______
______ ______ ______

2. படங்களின் பெயர்களை அகர வரிசையில் எழுது.



______ ______ ______ ______
______ ______ ______ ______

மரம் வளர்ப்போம்; மழை பெறுவோம்.

# செய்யுள் பகுதி

## ஆத்திசூடி

1. தந்தை தாய்ப் பேண்.
2. நன்றி மறவேல்.
3. இளமையில் கல்.
4. செய்வன திருந்தச் செய்.
5. சோம்பித் திரியேல்.
6. நன்மை கடைப்பிடி.
7. நூல் பல கல்.
8. பெரியாரைத் துணைக் கொள்.
9. ஊருடன் கூடி வாழ்.
10. வைகறைத் துயில் எழு.

- **ஔவையார்**

**பொருள் அறி:**

பேண் - காப்பாற்று; மறவேல் - மறக்காதே; கல் - படி; திரியேல் - திரியாதே; துணைக்கொள் - நட்பாக்கிக் கொள்; துயில் - தூக்கம்; வைகறை - அதிகாலை.

**சுற்றுப்புறத்தைத் தூய்மையாக வைத்துக்கொள்.**

# புதிய ஆத்திசூடி

1. கொடுமையை எதிர்த்து நில்.
2. செய்வது துணிந்து செய்.
3. சொல்வது தெளிந்து சொல்.
4. தேசத்தைக் காத்தல் செய்.
5. நன்று கருது.
6. நீதி நூல் பயில்.
7. நேர்படப் பேசு.
8. புதியன விரும்பு.
9. யாரையும் மதித்து வாழ்.
10. வருவதை மகிழ்ந்து உண்.

**தேசியக்கவி சி. சுப்ரமணிய பாரதியார்**

**பொருள் அறி:**

கொடுமை - தீமை; தெளிந்து - ஆராய்ந்து;
தேசம் - நாடு; நன்று - நல்லவற்றை;
கருது - நினை; பயில் - படி;
நேர்பட - உண்மையாக;
வருவதை - கிடைப்பதை.

பெற்றோரைப் போற்றிக் காப்பாற்று.

# கொன்றை வேந்தன்

1. அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்.
2. ஆலயம் தொழுவது சாலவும் நன்று.
3. எண்ணும் எழுத்தும் கண் எனத் தகும்.
4. ஏவா மக்கள் மூவா மருந்து.
5. சுற்றத்திற்கு அழகு சூழ இருத்தல்.
6. தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை.
7. தாயில் சிறந்ததொரு கோயிலும் இல்லை.
8. திரை கடல் ஓடியும் திரவியம் தேடு.
9. மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம்.
10. ஊக்கம் உடைமை ஆக்கத்திற்கு அழகு.

- **ஔவையார்**

**பொருள் அறிக:**

அன்னை - தாய்; பிதா - தந்தை;
தொழுவது - வணங்குவது; சாலவும் - மிகவும்;
ஏவாது - சொல்லாது; மூவா - முதுமை அடையாத;
சுற்றம் - உறவினர்; மந்திரம் - உயர்வான சொல்;
திரை - அலை; திரவியம் - பொருள்; ஆக்கம் - உயர்வு.

எவரிடமும் எப்போதும் அன்பாக இரு.